அவைகளில் அமைந்திருக்கும் பொருட்களோ ஆத்துமாக்களை சிற்றின்பம் அவபக்தி என்னும் மீளாக்கயத்தில் ஆழ்த்தி நித்தியநாசத்தை வருவிக்கத்தக்கவைகள். எத்தனையோ மனுக்கள் இவற்றால் நரகத்துக்கு இரையாய்ப் போனார்கள்! இவைகளை இயற்ற தங்கள் ஜீவநாள் முழுவதையும் போக்கின வித்துவான்களும், இவற்றை அச்சடித்து கடைகளில்வைத்தும் ஊர்தோறும் திரிந்தும் விற்பனை செய்கிறவர்களும் உலகத்துக்கு உபகாரிகளாவார்களா? அவர்கள் கள், கஞ்சா, அபின் என்பவற்றின் வியாபாரிகளுக்கு ஒப்பானவர்கள் என்கலாமே. அப்படியிருக்க இளைஞர் இவைகளின் பேரில் ஆசை கொள்ளத்தக்கதாக இவைகளைப் பாடிப் புகழ்ந்து காண்பிக்கும் பெற்றோரும் மற்றோருமோ எத்தன்மையானவர்கள் என்று சொல்லலாம்? இத்தேசத்தவருக்குள் நடமாடி வரும் இவ்வகை தீய நூல்கள் அநேகத்தின் பேர் விவரங்களை விளம்பக்கூடும். ஆகிலும் "தீயார் குணங்கள் உரைப்பதுவும் தீதே" என்றபடி அவற்றின் நாமங்களை இச்சந்தர்ப்பத்தில் கூறுவதும் கேட்பதும் முதலாய் ஒருவேளை பெரும் கேட்டுக்கு ஏதுவாகும் என்ற பயத்தால் அவைகளைப்பற்றி அதிகம் விவகரிக்காமல் இம்மட்டில் நிறுத்த வேண்டியதாயிருக்கிறது.

மத்திம புஸ்தகங்கள் விஷத்துளிகள் கலந்த நிறை பாற்குடம்போலும், மணலோடு விரவின அரிசிபோலும், நல்விஷயங்களும் தீயவிஷயங்களும் அமைந்தவைகளாயிருக்கின்றன. இவற்றால் என்னபயன்? பத்து சுகதேகிகளிடையில் ஒரு சுகவீனன் சேர்ந்திருந்தால் அவர்கள் சுகம் இவனுக்கு கிடைக்காது: இவன் தொத்துநோயோ அப்பத்துப்பேரையும் தாவி வாதிக்கும். அதுபோல இவ்வகை புஸ்தகங்களாலும் கொடியமோசம் விளையத்தக்கதால் அவற்றை முற்றும் விலக்கிவைப்பது அவசியம். ஒருவர் சொல்லுகிறபடி "இவ்வகையான நூல்களிலுள்ள நன்மை அதி வேகமும் மிக ஆழமுமான ஒரு ஆற்றின் அடியில் அமைந்திருக்கும் சில முத்துகள்போல் இருக்கிறது. இந்த முத்துக்களுக்காக முக்குளிப்பதில் உயிர்போவது நிச்சயம்."

மூன்றும் வகையனவாகிய உத்தம புஸ்தகங்கள் தொகையில் குறைவாயிருப்பினும், அவற்றில் நமது ஜீவகாலம் முழுவதும் கற்றுணரத்தக்க போதனைகள் உண்டு. விலங்குகளில் சிம்ஹமும், பட்சிகளில் ஆளியும், தருக்களில் சந்தனமும் ராஜத்துவம் உடைத்தாயிருப்பது போல, புஸ்தகங்களிலும் அந்தந்த சாஸ்திரத் துறைகளில் பொருள் நயம், சொல் நயம் முதலிய காரணமாய் அரசாயிருக்கப்பட்ட உத்தம நூல்களுண்டு. அவ்வகைப் புஸ்தகங்களைத் தெரிந்து வாசிக்கவேண்டும். மனிதர் வாசித்தறிய வேண்டிய சகல விஷயங்களிலும் ஆத்ம விஷயமே அத்தியந்த முக்கியமானது. அப்படிப்பட்ட உத்தம புஸ்தகங்களைத் தெரிந்தெடுத்து வாசிக்கவேண்டியது. தற்காலம் பாலர் முதல் விருத்தர் ஈறாக எல்லாரும் வாசிக்கத்தக்கதாய் பள்ளியிலு முபயோகிக்கத் தக்கதாம் உள்ள புஸ்தகங்களில் விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள் சிறந்து விளங்குகின்றன. அவற்றிலும் கமலாம்பாள் சரித்திரம் மிக சிலாக்கியமானது. அதை யெல்லாரும்வாங்கி வாசித்தல் உத்தமம்.

புஸ்தகங்கள் இவ்வளவு திரளாயிருக்க, அவைகளில்நல்லதின்னது தீயதின்னது என்று பகுத்தறிவதெப்படி என்று சிலர் கேட்கலாம். அறிவது அதிக பிரயாசமல்ல. எப்படியென்றால், ஒரு புஸ்தகத்தின் லட்சணத்தை, அதைச் செய்தவருடைய தன்மை, நோக்கம் முதலியவைகளை கவனிப்பதினாலும், அவர் செய்திருக்கும் மற்ற நூல்களின் பொது லட்சணத்தைக் கொண்டும், அப்புஸ்தகத்தின் பிரிவுகள் பொருள் அட்டவணைகளை நோக்குவதினாலும், இவைகளினால் விளங்காவிடில் அப்புஸ்தகங்களில் ஒரு பாகத்தை திட்பநுட்பமாய்த் வாசிப்பதினாலும் அறியலாம். ஒரு சுருக்கவழி என்னவென்றால் அப்புஸ்தகங்களைப் பற்றி, நம்மை

விட அறிவாளிகளும் யோக்கியருமானவர்களுடைய அபிப்பிராயத்தை அறிவதே. நல்ல மரங்களும் நச்சுமரங்களும் மிக்கவாயினும்,உலகத்தில் பிரத்தியட்சமாய்த் தெரிந்திருக்கிறது போல, சற்குணரான வித்வான்களுக்கு நூல்களுடைய குணதோஷங்கள் களங்கமறத் தெரியுமாதலால் அவர்களைக் கேட்டு உலகப்பிரசித்தமான நல்ல புஸ்தகங்களைக் ஐயமின்றி வாசிக்கலாம். நமது தேசத்தில் வழங்கும் பல நூல்கள், ஒரு வித்வான் கூறினபடி, இரண்டும் இரண்டும் ஐந்து என்று பலதாஷ்டாந்த திர்ஷ்டாந்த பூர்வமாய் ரூபித்தாற்போல நியாய விரோதமான பொருள் அடங்கிய அகட விகட கற்பனைக் கவிகளா யிருக்கின்றன. அநேகம் சித்திரக் கவிகளும், வீண்பொழுது போக்குக்கேற்ற விரோதமான கதாப்பிரசங்கங்களும், நாமதேய வர்ணங்களும் அந்தாதிகளுமாய் சொல் விரிந்து பொருளோ மிகவும் சுருங்கியிருக்கிறது. இப்பேர்ப்பட்டவைகளை வாசிப்பதினால் மனசு சாத்வீக சற்குணம் அடையும் என்று கனவிலும் எண்ண ஏதுவில்லை. மேலும் வாசிப்புக்கு உபயோகமான புஸ்தகங்களை தெரிந்து சேர்ப்பதில் மேற்சொல்லியபடி ஸர் ஜான் லூபக்கு என்னும் வித்வான் அனுசரித்தமுறைமை நாம் உபயோகிக்கத் தக்கது. அவர் தமக்கு அவசியமான கல்வித் துறைகளில் பிரசித்தமாயுருந்த சிரேஷ்டமான நூறு நூல்களை ஆராய்ந்து தெரிந்தடைந்து அவைகளை வாசித்து வந்தார். அவர் செய்தது நல்ல யுக்தி.

புஸ்தகங்களை இத்தனை திட்பநுட்பமாய்த் தெரிந்து வாசிக்கத் தேவையென்ன? என்று விசாரிக்க ஏதுவுண்டு. அது மிகவும் அவசியந்தான். எப்படியென்றால் நாம் வாசிக்கும் புஸ்தகங்களின் தன்மைக்குத் தக்கதாகவே நாம் அடையும் அறிவும் நமது சம்பாஷணைப்போக்கும், எழுத்துப் போக்கும், நமது மனோமுயற்சியும், நமது குணங்குறிகளும் நடபடிகளும், அவற்றால் லபிக்கும் இம்மை மறுமை அனுபவங்களும் ஒருவாறு இருக்கும். மனிதர் பிறக்கும்போது அவர்கள் மனம் அக்ஷரம் தீட்டாத வெற்றுக் கடுதாசிபோல அறிவின்மை பொருந்தியதா யிருக்கிறது. ஒரு கடுதாசியில் வரையப்படும் எழுத்துக்குத் தக்கதாக அது ஒரு காசு பெறாததாயும் போகலாம், ஒரு கோடி ரூபாய் பிடிக்கிறதாயுமிருக்கலாம். அதுபோல, நாம் வாசித்துப் பழகும் புஸ்தகங்களின் தன்மைக்குத் தக்கதாக நமது மனதின் பெறுமதியும் இருக்கும். ஆகையால் மனம் என்னும் நமது கடுதாசியில் நல்ல நூல்களைத் தெரிந்து அவ்வைகளிலுள்ள நல்ல விஷயங்களைப் பதிக்கவேண்டும். விசேஷமாய் பாலியத்தில் வாசிக்கும் புஸ்தகங்களைக் குறித்து கவனமாயிருப்பது அவசியம். ஏனென்றால், அவைகளால் உண்டாகும் அபிப்பிராயங்கள் "இளமையிற் கல்வி சிலையில் எழுத்து" என்றபடி மனதில்பலமாய்ப்பதிந்து ஜீவகால முழுவதும் மனதோடுகூட வளர்ந்து ஸ்திரப்படும். மரப்பட்டைகளிலும் இலைகளிலும் வசிக்கும் அநேக பூச்சிகளின் நிறம் அப்பட்டைகள் இலைகளின் நிறமாகவே யிருக்கும். சுகந்த வாசனை கமழும் பூங்காவனத்தில் உலாவுகிறவர்களுடைய வஸ்திரமும் சுகந்தம்வீசும். பற்பல வியாபார ஸ்தலங்களிலும், 'கோர்ட்டு' கச்சேரிகளிலும், ராஜ சமுகத்திலும் சஞ்சரிக்கிறவர்களுடைய பேச்சு எழுத்துப் போக்குகளில் காணப்படும் பேதங்களுக்கு காரணம் அவரவர் செய்யும் சம்சர்க்க விகற்பமல்லவா? ஆகையால்,

> "கல்லாரே ஆயினும், கற்றோரைச் சேர்ந்தொழுகின்
> நல்லறிவு நாளும் தலைப்படுவர்,—தொல்சிறப்பின்
> ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
> தண்ணீர்க்குத் தான் பயந்தாங்கு."

என்றதுபோல நாம் வாசிக்கும் புஸ்தகங்களின் சொல்லே நமது சொல்லாகும். அவற்றின் வாசக நடையே நாம் எழுதும் பேசும் வாசக நடையாகும். தகாத தன்மையுடைய ஒரே புஸ்தக வாசிப்பால் நமது குணங்குறிகள் இம்மையிலும் நித்திய கெடுதியடையக்கூடும். ஆகையால் சொல்லில் பொருளில் சிறந்த புஸ்தகங்களையே தெரிந்து வாசித்தல் எவ்வளவோ அவசியம்!

## ON WAGES.

## வேதனம் அல்லது கூலி.

---

ஒரு வேலைக்காரன் தனது வேலைக்காகப் பெறும் பாகத்திற்கு வேதனம் அல்லது கூலியென்று பெயர். இத்தகைமையான வேதனமென்பது சில ஸமயங்களில் தினந்தோறும் பட்வாடா செய்யப்படுகிறது. வெகுவாய் ஐரோப்பிய கைத்தொழிற்சாலைகளில் வாரத்திற் கொருதடவையாகக் கொடுக்கப்படுகிறது. உயர்ந்த தொகையுள்ள வேதனம் மாதாந்திரமாகக் கொடுக்கப்படுகிறது. சிறுபான்மை வருஷாந்திரமாகவீந்து கொடுக்கப்படுவதும் உண்டு. இப்படியாக எத்தன்மைத்தாயினும் முற்செய்த வேலையின் கூலியாகக் கொடுக்கப்படுவதற்கெல்லாம் பொதுவாக வேதனம் என்னும் பெயரைத் தருவோம்.

உலகத்தின்கண் உத்பத்தியாகும் ஸமஸ்தவிதமான தனமும் முதல் முதல் நாணயரூபமாக வில்லையாதலாலும் மற்றும் வேலையாட்களுக்குக் கொடுப்பதோ நாணயரூபமாகற்றுனிருப்பதாலும் வேதனவிஷயமான தத்துவமானது பதார்த்தங்களின் அகவிலை, புறவிலை முதலிய விலை மயக்கங்களாலும், நாணயங்களின் ஏற்ற வித்தியாசங்களாலும் பலவிதமாக பாதிக்கப்பட்டுச் செல்வநூலில் தேர்ந்த மகா பண்டிதர்களையும் மயக்கத்திற்கு உள்ளாக்கி வைத்திருக்கிறது. இவ்விதமயக்கம் நமக்கு நேராமலிருக்கவேண்டுமாயின் நாம் நாணயரூபமான வேதனத்திற்கும், ஸாக்ஷாத் வேதனத்திற்கும் உள்ள வித்தியாஸத்தை முதலில் அறியவேண்டியது. ஒரு வேலைக்காரன் வேலை செய்வதென்னத்திற்கெனில் தனக்கு உண்டு உடுத்தனுபவிக்கவேண்டிய பதார்த்தங்கள் கிடைப்பதற்குத்தான். ஆகவே அவனுடைய உண்மையான வேதனம் இவைகளே. இவைகள் அவனுக்குப் போதுமானமட்டும் கிடைத்தாற்போதும். அவன் வேலைசெய்ய இணங்குவான். பணரூபமாக அவனுக்குக் கிடைப்பது குறைந்தாலும் சரி, அதிகரித்தாலும் சரி, இவ்வித்தியாசம் அவனுக்குத் தோன்றுது. ஆனால் பணரூபமான வேதனம் அதிகமாயினும், அவனுக்கு வேண்டிய ஸாமக்கிரியைகள் விலைகுறைந்து, போதுமானமட்டும் அவ்வுயர்ந்த வேதனத்திற்கும் கிட்டாவிடில் தன் சம்பளத்தைக் குறைச்சலாகவே அவன் பாவிப்பான். செலவுபோக மீதிநிற்பது எதுவோ அதுதான் ஒரு மனிதன் செல்வத்தைக் குறிக்கப் போதுமான நிலையறிகருவி (Plutometer). ஆகவே ஸாமான்யமாய்க் கூலியாட்கள் சுகமடையவேண்டுமாயின், ஒவ்வொருவனும் பெறும் நாணயரூபமான வேதனம் அதிகரிப்பதுடன், பதார்த்தங்களின்விலை ஸஹாயமாக வேண்டும். பதார்த்தங்களின் விலைகளில் அவைகளைச்செய்வித்த வேலைக்காரர் பெறும் கூலிகள் அடங்கியிருப்பதால் இப்படிப்பட்ட உயர்ந்த வேதனத்துடன் மலுவானவிலை யேற்பட வேண்டுமானல் மூலதனத்தானும், எஜமானனும் பெறும் பாகங்கள் தக்கபடி குறைவடையவேண்டியது. ஆகையால் ஒரு ஜனஸங்கத்தில் உள்ள எல்லோருக்கும் பொதுவாக அதிக வேதனம் கிடைக்கவேண்டுமானல் வியாபாரஸ்தலத்திற்குக் கொண்டு வரப்படும் வௌக்கியத்திற்கு இன்றியமையாத ஒவ்வொரு பதார்த்தமும் சுலபமான விலைக்கு அகப்படவேண்டும். இதுவே இராச்சியம் முழுமையும் ஸுகமாயிருக்கப் பேணும்வழி. அப்படியன்றி பிரத்தியேகமான வியாபார விஷயத்திலும் தனைத்தத்திவிஷயத்திலும் வியாகிருதர்களான வேலைக்காரர்கள் பலவிதக்கட்டுப்பாடுகளால் தங்கள் வேதனத்தையுயர்த்தி அதனுல் பதார்த்தங்களின் விலையை அதிகரிப்பித்தால் எல்லா ஜனங்களுடைய கைப்பணத்தினின்றும் அதிகமாக நாணயரூபமான வேதனத்தைக் கவர்ந்து, வேதனத்தைக் குறைப்பிக்க இடமாகும். இப்படியாக உண்மையான வேதனம் மனிதனுக்கு இன்றியமையாத ஆகாரத்திற்குறிபவை யாயி

னும், நாகரிகம் மிகுந்த நாடுகளில் மனிதனுக்கு வேண்டியவை பலவாகையாலும் அவை வெவ்வேறு தேசங்களினின்றும் வேவ்வேறுகைகள் மாறியும் வரவேண்டுமாகையாலும் ஜனங்களுக்குள் ஸுலபமாக கைமாறல் நடக்க ஸ்வபாவமாக உத்பத்தியாகபபட்ட உயர்ந்த லோகங்களாலாகிய நாணயமென்னும் ஸாதனக்கருவி வழங்கிவருகிறது. எல்லாவிதமான பதார்த்தவிலை மயக்கங்கட்கு உட்படுத்தி இவ்வித நாணயரூபமான வேதனத்தையே நாம் வேதனமாக பாவிக்கவேண்டியது.

இவ்வாறு மேலே விரித்துக்காட்டிய வேதனவிஷயத்தில் ஒரு வேலைக்காரனுக்கும் மற்றொரு வேலைக்காரனுக்கும் ஏன் வித்தியாசம் நேரிடுகிறது என்று நாமறிய முயலவேண்டியது. இப்படியாக வுண்டாகும் வித்தியாஸத்திற்கு வெகுவாய் அவரவர் ஸாமர்த்தியம் முதலியவைகளே காரணம். பலமுறை வேலையாட்களின் சரீரத்தினுடையவும் மனத்தினுடையவும் வலியே போதுமான காரணமாயிருக்கிறது. மற்றும் சில விடங்களில் இயற்கையான வித்தியாசம் இல்லாமலிருக்கினும் சிலர் உயர்ந்த இடங்களில் பிறந்து விசேஷமான கல்விகளைக்கற்று மற்றவர்களிலும் அதிகம் வேதனம் பெறக்கூடியவராகிறார்கள். நாம் எல்லாமனிதர்களும் பொதுவாக ஸமானமானவர்களென்று சொல்வது தகாதது; ஏனெனில் பிறப்பிலேயே ஒரு குழந்தைக்கும் மற்றொரு குழந்தைக்கும் உள்ள உயர்விழிவு நமக்கு நன்றாக அனுபவத்தில் பட்டிருக்கிறதும் தவிர மேற்கூறியபடி ஜன்மவசத்தால் நேரிடும் அப்பியாஸ அனப்பியாஸத்தாலும் வெகுவிதமாக வித்தியாஸம் ஏற்படுகிறது. ஆகையால் மனிதவாழ்க்கையுள்ள வரையில் இவ்வித்தியாஸத்தாலாகிய வேதன வேற்றுமையிருந்தே தீரும்.

மேற்கூறிய வேதனவித்தியாஸம் எப்படி உலகில் ஸாதிக்கப்படுகிறது என்பதை செல்வநூலாசிரியரில் முதல்வரான ஆதாம் ஸ்மித் (Adam Smith) என்பவர் விச்சிதமாக விளக்கிக்காட்டியிருக்கிறார். செல்வநூலில் மிக்கபடி வழங்கும் விதி: அவாவும் துகையும் எப்போதும் சரிஸமமான நிலையையே பேணி நிற்கும்—என்பதுதான். ஒரு வஸ்து போதாமல் இருந்தால் அதற்கு அவா (Demand) அதிகரித்து அதின் துகை (Supply) சரியாகும் வரையில் அதிகமாக அப்பதார்த்தத்தை வியாபாரஸ்தலத்திற்குக் கொண்டுவரச்செய்யும். இப்படியேதான் வேதனவிஷயத்திலும். ஆயினும் மனிதன் சிற்சில காரியங்களில் கௌரதையும் சிலவற்றில் அகௌரதையும் இருப்பதாக எண்ணி முற்கூறியவற்றில் பிரவேசித்தும் பிற்கூறியவற்றை வெறுத்தும் வருவதால் மேற்கூறிய அவாவையும் துகையையும் பற்றிய நியமும் நடவடிக்கையில் அதிக மாறுபாடடைகிறது. இப்படி மாறுபாடடையும் வழிகள்:

1. உத்யோகத்தின் மாதிரியை ஒத்து இருக்கக் கூடும். எப்படி எனில் ஒருவேலையானது ஸுகரமாயும், கண்ணியத்துடன் பார்க்கப்பட்டதாயும் இருப்பின் அதில் தாழ்ந்த வேதனம் கிடைத்தபோதிலும் பலபெயர்கள் நுழைவார்கள். உதாரணமாக நம்தேசத்தில் பி. ஏ. முதலிய பரீக்ஷைகளில் தேறிவிட்டு வாலிபர்கள் பலர் உத்தியோகத்திற்குப்போய் ஸ்வல்ப சம்பளம் பெறுவது அவர்கள் மேற்படி உத்தியோகத்தில் காணும் அந்தஸ்தும் கௌரதையுமே. கள், மாமிசம் முதலியவைகளை விற்பதில் பலர்கள் வெகு சீக்கிரம் நிரம்ப திரவியத்தைச் சம்பாதித்துக்கொள்கிறாராயினும் அவர்களது கிருத்யம் ஜுகுப்ஸையை உண்டாக்கக்கூடியதாகையால் துகையவா நியமம் கௌரதைபாராட்டுபவரை இவ்வியாபாரங்களில் போக்கிவைக்கிறதில்லை.

2. தொழிலைக் கற்பதில் உள்ள கடுமை முதலியன.

ஜனங்கள் வெகுவாய் எளியவராயிருத்தலாலும், பல தொழில்கள் கற்பதற்கு வெகுகாலத்தையும் பொருளுதவியையும் வேண்டுகின்றனவாகையாலும், அநேகர் சிறுமைப்பருவம் கழி

யாமுன்னமே தங்கள் வயிற்றை வளர்க்க ஏதா வது ஒரு வழியைத்தேடிக்கொள்ள நேரிடு கிறது. ஆகையால் தங்கள் புத்தியுக்திக்குத் தக்க தொழிலைச்சேருவதற்கு அவகாசமில்லா தவர்களாக ஆயுள்நாள் வரையில் அற்பக்கூலி க்கு உழைத்து மரிக்கிறார்கள்.

3. தொழில் நீடித்திருத்தல், ஒருவாறு அற்ப வேதனத்திற்கு ஒரு சாக்காயிருக்கிறது. சில வேலைகள் சில மாதங்கள் மாத்திரம் நடந் தேறிவரலாம். பிறகு பல காரணங்களால் வேலை நின்றுபோய் அதில் உழைத்துவந்தவர்க ளுக்கு ஒரு போக்குமில்லாமல் விட்டுவிடலாம். இவ்விதவேலையில் பிரவேசிப்போர் அதிகமாக வருமானம்வந்தால் ஒழியபரந்தரமான வேலை யில் குறைந்த சம்பளம் கிடைத்தபோதிலும் விட்டுவிடமாட்டார்கள்.

4. மேலும் பலதுறைகளில் வேலைகளில் நியமிக்கப்பட்டவர் வெகு நம்பிக்கைஸ்தராக விருக்கவேண்டியிருப்பதால் அனேகர் தகுந்த ஸாமர்த்தியம் முதலியனவுடையாரேனும் நற் குணக்குறைவால் உயர்ந்த வேதனம் கொடுக் கக்கூடிய வேலையைப் பெறுகிறதில்லை.

5. கடைசியாக, வேலையில் பிரவேசித்த ஒவ்வொருவனும் பிரபலனாவது முடியாதகாரி யம். பிராபல்யம் ஸர்வஜனஸாமானியமல்ல. பத்துப்பெயர் சேர்குலைந்தால் ஒருவன்தான் சீர் பெறுகிறான். ஆகவே எத்தொழில்களில் இவ் விதமாகப் பெறும் தகைமை ஸாமானிய மன்றோ அவைகளில் சிலர் மிகவும் உயர்ந்த சம்பளத்தையும் பலர் அற்பவேதனத்தையும் பெறுவார்கள். இதற்குதாரணமாக வக்கீல்கள், வயித்தியர்கள், அதிகாரிகள் இவர்களைக்கொள் ளலாம். ஆனால் எத்தொழிலில் இவ்வித வித் தியாஸத்திற்கு இடமில்லையோ அங்கே எல்லா ருக்கும் ஏறக்குறைய ஒரே வேதனப்பாடுதான். இக்காரணம்பற்றித்தான் போரில் தன்னுயிரை கொடுக்கவந்து முன்னிற்கும் வீரர்க்கு அவ் வளவு அற்பமான சம்பளம் கிடைப்பது.

---

## THE OLD MAN'S COMFORTS AND HOW HE GAINED THEM.

## ஓர் கிழவனுற்ற சௌக்கியங்களும் அவன் அவற்றை எவ்வாறுற்றானென்பதும்.



[ஒருவர் முதுமையும் தளர்ச்சியும் வந்த காலத்தில் தளர்வடையாமல் திடகாத்திரராய் மனமகிழ்ச்சி யுற்றிருப்பதற்கும் தளர்ச்சியடைந்து நோயாலுழன்று வருந்தியிருப்பதற்கும் அவரவர் பாலியத்தில் நடந்து கொள்ளும் நடத்தையும் செய்யும் காரியங்களுமே காரணம் என்னும் இவ்வுண்மையை எடுத்துவிளக்கி, முது மைப்பருவத்தில் நோய் நொடியில்லாமல் சுகமாகக் களித்துவாழவிரும்பும் இளைஞர்களுக்கு அதன் உபாயத்தை யும் இது போதிக்கின்றது. இதனை எல்லாரும் விரும்பிப்படிப்பார்களென்று இங்கு தமிழ்ப்பாவால்எடுத்துக் கூறலாயினோம்.

இது ஒரு கிழவனுக்கும் இளைஞனுக்கும் நடந்த சம்பாஷணையாகக் கூறப்பட்டது. இளைஞன்கேட் கக் கிழவன் விடை பகர்கின்றான்:]

1. ஐயநீ நோக்குமின் முதுமை யார்ந்தனை,
நையலில் முடிமயிர் நரைத்த தாயினும்,
மெய்யுறு வலியொடு மேனி தேய்ந்திலாய்;
செய்யவிவ் விசித்திரம் செப்பு வாய்கொலோ?

(நீ முதுமையடைந்து முடிமயிர் நரைத்தாயாயினும் தேகவலியும் திடகாத்திரமும் இழந்தாயில்லை; இதற்குக் காரணம் யாது?)

2. செப்புவன் ; இளமையாற் சிறந்த நாட்களில்,
ஒப்பறும் அவைவிரைந் தொழித லோர்தலால்,
கைப்படு வலியுநற் சுகமும் கண்டவா,
பிற்பொழு தயர்ந்திடப் பிதிர்த்தி லேனரோ.

(இளமைப்பருவத்தில் இளமையானது நிலையற்றதென்றறிதலினாலே என் பலத்தையும் சுகத்தையும் துர்வினியோகத்தில் போக்கிக்கொள்ளவில்லை. அதுதான் காரணம்.)

3. அத்தநீ ஆய்ந்திடின் முதியை ஆயினை,
பொத்திய மகிழ்வெலாம் இளமை யோடுபோம்,
சத்திய மாயினும், தணந்த நாட்களுக்
கெத்தனை யேனுமென் னிரங்கி லாயரோ ?

(நீயோ கிழத்தன்மையை அடைந்தாய்; மகிழ்ச்சியோ இளமையோடும்போம். ஆயினும் நீ சென்ற நாள்களை நினைத்து ஏன் வருந்தவில்லை?)

4. சாற்றுவன் இளமையைச் சார்ந்த நாள்சில,
ஏற்றவை கழிந்திடும், என்ன ஓர்கலால்,
தோற்றிடும் நாட்களிற் றுயரு றுவகை,
ஆற்றுநற் செயல்களை அறிவின் ஆற்றினேன்.

(இளமையானது நிலை நில்லாததென்றறிதலினாலே பின் அதை நினைந்து வருந்ாதபடி செய்யும் காரியங்களைச் செவ்வையாகச் செய்தேன்.)

5. தாதநீ முதுமையைச் சார்ந்தை; சாய்ந்தினி
ஓதிய உயிர்விரைந் தோடு மாயினும்,
தீதறு கனுப்பொடும் சேரும் மாய்வினைப்
பேதற வின்றியே பேச லென்னையே ?

(நீ முதுமையை அடைந்தாய்; இனி நீ வெகு நாளிருக்கப்போகிறதில்லை ; ஆயினும் உற்சாகமாயிருக்கிறாய் ! மரணத்தைப்பற்றிச் சஞ்சலமின்றிப் பேசுகின்றாய். அதெப்படி ?)

6. அறைகுவன் அகங்களித் திருக்கும் காரணம்,
நிறைகுணத் தருளொடு நிரம்பு மீசனைப்
பெறவரும் இளமையிற் பேணல் தீர்ந்திலேன்,
இறைவனும் மறந்திலா னென்னை யின்றரோ,

(நான் அகமகிழ்ச்சியோடிருப்பதற்குக் காரணம் பால்யத்தில் தெய்வபக்தியும் ஈச்வரசிந்தனையும் கைவிடாமல் கடவுளை வழிபட்டுவந்ததனால் அக்கடவுள் என்னை முதுமையடைந்த இக்காலத்தில் கைவிடாமல் ஆதரித்து வருகின்றார்.)

---

## THE GOLDEN NECKLACE.

## தங்க அட்டிகை.

I

அவள் 14-வயதுள்ள ஓர் இளமடந்தை. அவள் உருவமும் அழகும், ஒயிலும் நடையும் அவளை அந்தஸ்துக்கொண்டாடப் பிறந்தவளெனக் காட்டின. ஆனால் அவள் பிறந்துவளர்ந்தது ஒரு ஏழைக்குடும்பத்தில். அவள் வாழ்க்கைப்பட்ட கணவன் சொற்ப சம்பளமுள்ள சர்க்கார் உத்தியோகத்தில் அமர்ந்தவன். மாதச் சம்பளம் ரூ. 15 ஆனாலும் சர்க்கார் உத்தியோகமானதால் கௌரவமாகப்பாராட்டப்பட்டு வந்தது. அந்தமட்டில் அது அவளுக்குச் சந்தோஷமாக விருந்தாலும், அவள் தனக்குரித்ததென்று கருதிய கண்ணியம் பெருமையைப்பாராட்ட அவன் சம்பளம் போதாமையாகவிருந்தது. அவளுக்கு மிகவருத்தமும் மனஸ்தாபமு முண்டுபண்ணிற்று. இருந்தாலும், அவள் அதைரியப்படவில்லை. குடித்தனம் செய்வதில் அவள் மிகச் சிக்கனமாகச்செலவுசெய்து சமாளிக்கத்தக்கவளாகப் பிறந்தகத்துப் பழக்கத்தால் தேர்ந்திருந்தாள். அதைக்கொண்டு அவள் தனக்குத் தெரிந்த செட்டுச்சிக்கனமெல்லாவற்றையும் உபயோகித்து அவள் அந்தஸ்துப் பாராட்டுவதற்கு வேண்டிய நகைநட்டுகளையெல்லாம் செய்துகொள்கிறதென்று தன் மனதுக்குள் தீர்மானித்தாள். அவனும் அவள் இஷ்டத்திற்கு இரண்டுசொல்லாமல் போட்டதைப் புசித்துத் தன் வேலையைக் குறைவறப் பார்த்துவந்தான்.

இப்படிச் செட்டும் மட்டுமாக ஆறு வருஷகாலம் புருஷனும் மனைவியுமாக மனம்பொருந்திக் குடித்தனம் செய்துவந்தார்கள். இந்த 6-வருஷகாலத்தில் அவள் முகம் கோணினதில்லை; அவன்முகம் கடுத்ததில்லை. இருவரும் சந்தோஷமாகச் சுகித்து வாழ்ந்து வந்தார்கள்.

அவளுக்கு வயது 20-ஆக அலர்ந்தமலர்போல் அவளிடத்துள்ள அழகுகளெல்லாம் பக்குவப்பட்டுப் பெருகிச் சொலித்தன. கருத்து நீண்டு சுருண்ட மயிர்களும், வேலன்ன விழிகளும், மதிபோன்ற வதனமும், உருண்டு நீண்டு கடைந்து விட்டதையொத்த கைகளும், புலியின் இடையையொத்த மருங்கும் மற்றுள்ள அழகுகளும் ஒன்றுகூடி அவளை ரதிதேவிபோல் விளங்கச்செய்தன. அவள் அழகு முதிரமுதிர அவள் புருஷனும் அதற்கு முற்றும் ஈடுபட்டவனாய் அவள் இட்டது சட்டமாக நடந்துவந்தான். அவள் அழகின் சிறப்பை அவளே நன்றாக உணர்ந்தவளாகவிருந்தாள். இயற்கை யழகு அவ்வளவிருந்தும் அவளுக்கு அது திருப்தியாகவில்லை. அவ்வளவு அழகிருந்தும் அலங்காரமற்றிருக்கவேண்டியிருக்கிறதேயென்பது அவளுக்கு மனதில் எப்பொழுதும்மாறாத ஒரு பெருங்குறையாகவிருந்தது. "யாரே அழகுக்கழகு செய்வார்" என்று பாடின கவி அழகின்னதென்றறியாத குருடனாக விருக்கவேண்டுமென்று பலமுறையுஞ் சொல்லித்தூற்றுவாள். மனதில் என்ன குறையிருந்தாலும் புருஷன்மேல் குற்றஞ்சொல்ல அவளுக்குச் சிறிதும் மனமில்லை. அவனுக்குக் கிடைத்ததை அவ்விடம் கொணர்ந்து அர்ப்பணம்செய்துவிட்டு அவள் இட்டது சட்டமாகப்பாவித்து அவளிடத்து மீளாக்காதல் வைத்து அடிமைபோல் நடந்துவந்த தன் கணவன்மீது குற்றங்கூற அவள் மனது சிறிதும் சம்மதிக்கவில்லை. ஆனால் அவள் அடிக்கடி பொதுவாகத் தன் விதியை நொந்துக்கொள்வாள். சில சமயத்தில் அவள் தன்னைத்தானே வெறுத்துக்கொண்டு "இத்தனையழகுமிருந்து என்னத்திற்காச்சு? சம்பத்துள்ள இடத்தில் பிறந்தேனா! அல்லது சம்பத்துள்ளவனைத் தான் தேடி மணந்தேனா? என்னவோ, விழலுக்கிறைத்த நீர்போல், காட்டிலெறித்த நிலவுபோல், இந்தப்பூமியில் பிறந்து பூஞ்சாளம் பிடித்து மடியத்தான் ஜன்மமெடுத்தேன். எடுத்த ஜன்மத்தை ஏப்படியாவது கழித்துத் தீரவேண்டியதுதான்!" என்று தனக்குத் தானே

நிஷ்டூரமாகச்சொல்லிக் கொள்வாள். மற்றொரு சமயத்தில் இப்பேர்ப்பட்ட எண்ணங்கள் வந்து மனதில் மூண்டுகொள்ளும் பொழுது வாயைத்திறந்து ஒன்றும் சொல்லாது மனதுக்குள் "எண்ணாத எண்ணமெல்லா மெண்ணி யெண்ணி" ஏக்கமுற்றுக் கடைசியில் "விதியை வெல்ல மதியாலாகுமா?" என்று பெருமூச்செறிவாள்.

"எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி" என்றதனால் அவளுக்குத் தன்புருஷனிடத்தில் பிரீதியில்லை யென்றாவது வேறு புருஷரிடத்திலிச்சையுற்றா ளென்றாவது இதை வாசிப்போர் ஒருவரும் நினைக்கவேண்டாம். அப்படிப்பட்ட துர் எண்ணம் அவள் சிந்தையில் எப்பொழுதும் நுழைந்ததேயில்லை. அந்த விஷயத்தில் அவள் பதிவிருதா தர்மத்துக்குக் குறைவு வரும்படியான சிந்தனையேதும் கனவிலும் நினைத்தாளில்லை. நல்லகுலத்தில் பிறந்த ஹிந்து ஸ்திரீ வாழ்க்கைப்பட்ட கணவனைவிட்டு வேறொருவனைச் சிந்தையிலும் கருதுவளோ? ஒருபொழுதும் கருதாள். நம் ஒயிலாம்பாள் (அதுதான் அவள் பெயர்: அவள் பாட்டியார் அவளுக்கு நன்றாக அந்தப் பெயரிட்டாள்) இது விஷயத்தில் மகா உத்தமஸ்திரீ. அவள் அழகுக்குத்தக்கபடி அலங்காரம் செய்துகொள்ள ஆபரணங்களில்லையே யென்பது தான் அவளுடைய பெருங்குறை.

நகைபூணாப் பெண்ஜன்மம் வீண்ஜன்மமென்பது அவளுடைய பலமான கொள்கை. நகைகளில்லாது மற்றென்ன சம்பத்துக்களிருந்தாலும் அவை நிறக்காவென்பது அவள் உறுதியாகக்கொண்ட எண்ணம். ஆகையால் எப்படியாவது நகைகள் செய்துகொள்ள வேண்டுமென்பது அவளுடைய மனதில் வெகுகாலமாகக் குடிகொண்ட பெரிய ஆசை. அந்த ஆசையைத் தீர்த்துக்கொள்ள அவள் விடாது உழைத்துவந்தாள். அவளுடைய புருஷனும் அவனாலான மட்டும் கஷ்டப்பட்டுழைத்துக் கிடைத்ததை அவளிடம் கொணர்ந்து கொடுத்துவந்தான். ஆறுவருஷகாலமாக வயிற்றை யொடுக்கி வாயை யொடுக்கிச் சிறுதனம் சேர்த்து ஸ்ரீதனம்கேட்டு 500-ரூபாய்க்கு நகைகள் செய்துகொண்டாள். இவ்வளவு தொகைக்கு நகைகள் சேர்ந்தும் அவளுக்கு முன்னுக் கிப்போது சிறிதாவது திருப்தியுண்டாகவில்லை. பார்க்கப்போனால் அதிருப்தி அதிகமாயிற்று. சிறுகச் சிறுகச் சேர்த்துச் செய்துகொள்ள வேண்டியிருந்ததால், அப்போதப்போது கையிலுள்ள தொகைக்குத்தக்கபடி ஒன்றிரண்டு நகைசெய்துகொள்வாள். சிறுகச் சிறுகச் சேர்ந்ததை வட்டிக்கிட்டுவைத்தால் மொத்தமாகச் சேர்ந்தபின் நல்லபொறுக்கு நகைகளாகச் சில வாங்கிக்கொள்ளலாமென்று அவள் கணவன் ஒருமுறை ஜாடையாகச் சொல்லிப்பார்த்தான். "கையிலிருந்தால் செலவழிந்துபோகும். எத்தனை நாளைக்கு நான் கட்டையாக நிற்கிறது" என்று கண்ணில் ஜலம்தளும்பக் கொஞ்சிக்கொண்டு ஒயிலாம்பாள் ஸ்வரம்போட ஆரம்பிக்கவும் கணவன் பயந்து "இல்லை; நான் சும்மாச்சொன்னேன். உன்னிஷ்டப்படியே நடப்போம்" என்று அவள் மனம்போல் அவள் கேட்டதை வாங்கிக்கொடுக்கத் தீர்மானித்துவிட்டான்.

"தட்டானைக்கொண்டுவா" என்றால் "இதோ வந்துவிட்டான்" என்று அழைத்துவந்து விடுவான். "பவுன் வாங்கவேணும்" என்று அம்மாள் வாய்திறந்து சொல்லுமுன் "எத்தனை வாங்கிவரட்டும்" என்று சொக்காயைப் போட்டுக்கொண்டு நிற்பான். இப்படி சில்லறையாகச் செய்துவந்ததால் முதலில்செய்த நகை மூன்றாவது நகை செய்து முடிக்குமுன் 'மோஸ்தர்' தப்பிப்போவது வழக்கம். பிறகு பழையநகையை விற்றுப் புதியமோஸ்தர்ப்படி நகை செய்யத்துவக்குவாள். இப்படித் தட்டான் வீட்டுக்கும் ஷராபுகடைக்கும் போய் வருவதிலே அவன் ஒய்வுகாலமெல்லாம் கழிந்துவந்ததன்றி இங்ஙனம் நடைபழகினதால் தேகசிரமம் அதிகரித்து, கச்சேரி

வேலையில் மனம் தளர்ந்துபோகலுற்றான். ஒரு நாளைக்கு ஆபீஸில் துரை தப்புசெய்ததற்காக மிக்க கண்டித்து அடுத்தமுறை பிழைசெய்தால் ‘மேல் ப்ரொமோஷன்’ நிறுத்தப்படும் என்று எச்சரிக்கைசெய்து உத்தரவு பிறப்பிக்க சாந்தசர்மா (அதுதான் அவன் பெயர்) வீட்டுக்குவந்து தன் மனைவியைப்பார்த்து ஆபீஸில் நடந்ததைச்சொல்லி, இனி தன்னை வீட்டுக்குவந்ததும் வெளியிலனுப்பி இழுக்கடித்தால் வேலையே போய்விடும். உண்கிற சோற்றில் மண்விழுந்தால் என்பேரில் குற்றஞ் சொல்லாதேயென்று சாந்தமாகச் சிறிதும் பதட்டமின்றிச் சொன்னான்.

ஒயிலாம்பாளுக்கு அவன் சாந்தமாகச் சொன்ன வார்த்தைகள் திகீலென்று அடிவயிற்றிலிடிவிழுந்ததுபோல் சென்று மனதிலுறைத்தது. அவன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டதும் சிறிதுநேரம் பிரமித்துச் சும்மாநின்று தன் பிரக்ஞை வந்ததும் அவள் “போதும், போதும், இந்தமட்டோடு நின்றது நல்லதாகப் போயிற்று. இனிமேல் நகைநட்டு வியாபாரம் ஒன்றையும் நான் உங்கள் காதில் போடவில்லை. உங்கள் வேலையை நீங்கள் ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டுவந்தால் அதுவே போதுமானது! நீங்கள் ஆயிரம் நகை வாங்கிக் கொடுத்தாப்போல!” என்று சொல்லி நகைப் பேச்சை அதுமுதல் புருஷன் காதில் போடுவதை நிறுத்திவிட்டாள்.

சாந்தசர்மாவும் ‘கழுத்துக்குக் கத்தியாக வந்தது மாலையாக விழுந்ததே: இதுவே சந்தோஷம். ‘நல்லன தீயனவாம் தீயனவும் நல்லனவாம்’,” என்று தனக்குத்தானே ஞானோபதேசம் செய்துகொண்டு தன் உத்தியோக வேலைகளைக் கவனமாகப் பார்த்துவரத் தொடங்கினான். சிறிதுகாலத்தில் அவன் தனக்கு வந்த கெட்டபேரை நீக்கிக்கொண்டு நல்லபேர் வாங்கினதோடு 5-ரூபா அதிக சம்பளமுள்ள உயர் உத்தியோகமும் பெற்றான். வேலையதிகமாகவிருந்தாலும் சம்பளம் கொஞ்சமாவது அதிகமானதைப்பற்றி சாந்தசர்மா சந்தோஷப்பட்டு உற்சாகத்தோடு வேலைசெய்து வந்தான். ஒயிலாம்பாளும் தன் புருஷனுக்கு 5-ரூபாய் சம்பளமுயர்ந்ததினால் தன் அந்தஸ்தும் அதிகரித்ததென்று சந்தோஷப்பட்டு பெருமிதங்கொண்டாடி வந்தாள். சம்பளமுயர்ந்தபின் முதல்மாசத்துச் சம்பளம் ஆபீஸில் பட்டுவாடா செய்யப்பட்ட அன்று சாயங்திரமே ஒயிலாம்பாள் கையில் வந்துசேர்ந்தது. “முதல் மாசத்துச்சம்பளம் நகைக்கு: இதை இப்படியே முடிந்து வைத்துவிடுவேன். இந்த மாசத்துச்செலவு அடுத்தமாசத்துச்செலவு இரண்டையும் அடுத்த மாசத்துச் சம்பளத்தைக் கொண்டு சரிப்படுத்திக் கொள்ளவேண்டும்” என்றாள், புன்னகையோடு புருஷனைப்பார்த்து முறுவலித்துக்கொண்டு.

“உன்னிஷ்டம்போல் செய்: எனக்கு ஆபீஸுக்குப் போகிறவேளைக்குமட்டும் இல்லையென்னாமல் இத்தனை சாதம் போட்டால் போதும்” என்றான் புருஷனும்.

மறுநாட் காலமே அதிக சுறுசுறுப்போடு வீட்டு வேலைகளைப் பார்த்துவிட்டு பொரியல் வறுவலோடு புத்தமுது சமைத்து புன்னகைமாறாது புருஷனுக்குப் படைத்தாள். அவனும் சமையலை ஸ்தோத்திரம் செய்துகொண்டு பெண்டாட்டிமுகத்தைப் பார்த்துக்கொண்டே திட்டம் தெரியாது வயிறு புடைக்க உண்டுவிட்டு, அம்மாள் தாம்பூலம் மடித்துக்கொடுக்க வாங்கிப்போட்டுக்கொண்டு, தான்பட்ட கஷ்டங்களெல்லாம் அன்றையொருவேளையன்புக்கும் இன்புக்கும் விலைகொடுக்கக் காணாது என்று நினைத்து மனமகிழ்ந்துகொண்டு ஆபீசுக்குச் சென்றான். அன்று முழுவதும் சாந்தசர்மா ஆபீஸில் வேலைபார்க்கும்பொழுதுகூட நினைத்து நினைத்துப் புன்சிரிப்புச் சிரித்ததை அவன் கூடவிருந்தவர்களெல்லாம் கண்டு பிரஸ்தாபிக்கலானார்கள். அன்று முழுவதும் அவனுக்கு ஆனந்தம்பொங்கி வழிந்துகொண்டிருந்தது. அவளுக்கும் அப்படியே,

மத்தியானம் மணி 12-ஆய்விட்டது. ஊரிலுள்ள புருஷர்களெல்லாம் அவரவர்கள்வேலை, வியாபாரம், தொழில்களைநாடி வெளியேபோய்விட்டார்கள். ஒவ்வொருவீடும் புருஷனற்று விளங்கியது. பெண்கள் கச்சேரிசெய்யத் துவக்கி விட்டார்கள். சென்னையில் சின்னக்கோர்ட்டு, பெரியகோர்ட்டு, ஸிவில்கோர்ட்டு, போலீஸ்கோர்ட்டுகளில் நடக்கும் சமாசாரங்களெல்லாம் பத்திரிகைகளில் வெளியாகிவிடுகின்றன. மத்தியானம் 12-மணிக்குக் கூடி மூன்றுமணிக்குக் கலையும் இந்தப் பெண்டீர் கச்சேரிகளில் நடக்கும் சங்கதிகள் மட்டும் வெளியாவதில்லை. ஆதலால் ஊர்ச்சேதியெல்லாமறிந்த அனேகருக்கு அவர்கள் வீட்டில் நடக்கும் சங்கதிதெரிய வகையில்லாமல் போகிறது. அப்படியிருந்ததினால்தான் இந்தக்கதையெழுதச் சரக்குக்கிடைத்தது. இல்லாவிட்டால் இல்லைதான்.

மத்தியானம் மணி 12 - ஆய்விட்டது ; கச்சேரி கூடும் காலம் கிட்டிவிட்டதென்று வீட்டிலுள்ள பெண்டீர் எல்லாரும் அவரவர் வேலையை அவசரமாய்ச்செய்து முடித்துவிட்டு, கைகால் கழுவி சுத்தி செய்துகொண்டு, வெற்றிலைத்தட்டை யெடுத்துக்கொண்டு வெயிலுக்குக் காற்றுவாங்க வாசல் நடையில் வந்துட்கார்ந்தார்கள். ஒயிலாம்பாளும் அப்படியே வெற்றிலைத்தட்டும் கையுமாக அவள் அழகும் தேஜஸும் இன்றைக்கு அதிகமாக அவள் முகத்தில் ஜொலிக்க வாசல்நடைக்குவந்து 'அம்மாடி!' யென்று உட்கார்ந்தாள்.

'அம்மாடி!' என்றுசொல்லி இவள் உட்கார்ந்ததையறிந்த எதிர்விட்டு நாரதாம்பாள், "ஏன்'டி, ஒயிலம், இத்தனை நாழிகையாச்சா இன்றைக்கு உனக்கு ?" என்று விசாரித்துக்கொண்டே அவளுக்கு எதிரில்வந்து உட்கார்ந்தாள்.

"வாடியம்மா, உட்காரு. இன்று காலையிலெழுந்திருந்தேன் ; உச் என்று உட்காரப் பொழுதில்லை ; இத்தனைநாழி, ஓடி ஓடி உழைத்தேன். இப்பொழுதுதான் காரியம்முடிந்தது. இன்னும் வெற்றிலை போட்டுக்கொள்ளவில்லை. இந்தா நீயும் போட்டுக்கொள்ளேன்" என்று வெற்றிலைத்தட்டை அவள் கிட்ட நகர்த்தினாள்.

"அதற்கென்ன போட்டுக்கொள்கிறேன். இன்றைக்கு வீட்டில் சமையல் பலமாட்டமாகத் தோன்றுகிறது!"

"பலமென்ன வந்தது! ஒன்றுமில்லை. தினம் வெற்றல் குழம்பும் தொகையலுமாகப் போட்டால் என்னமாகவிருக்கும் ! கொஞ்சம் பொரியல் வறுவல் செய்து வாய்க்கு ருசியாகச் சாப்பாடுபோடவேணுமென்று சமைத்தேன். அது இத்தனைநாழி வேலைவாங்கிவிட்டது."

இச்சமயத்தில் அடுத்த தெருவில் அனந்தையர் வீட்டு அடுக்களை வேலைக்காரியான எச்சம்மாள் என்னும் விதவை வெயிலைப்பார்க்காமல் வியர்க்கவியர்க்க நெற்றியிலுள்ள வியர்வையை விரலால் வழித்துக் கொட்டிக்கொண்டு வந்து சேர்ந்தாள். வந்தவள் 'உட்கார்' என்று சொல்லுமுன் தானே இருவருக்கும் மத்தியிலுட்கார்ந்துகொண்டு, "ஏனம்மா ஒயிலாம்பாள், உங்களகத்துக்காரருக்கு சம்பள முயர்ந்ததாமே, சொல்லக்கூடாதா?" என்று கேட்டாள்.

நாரதாம்பாள், "அதுதான் இன்றைக்கு வீட்டில் விருந்துச் சர்ப்பாடுபோலிருக்கிறது. அப்படிச் சொல்லு அதை. ஒயிலம், இதை எனக்குச் சொல்லப்படாதோ ! எனக்கொளித்த இரகசியமா ?"

"இதில் இரகசியமென்ன வந்திருக்கிறது. எத்தனையோ வருஷமாகக் கஷ்டப்பட்டுழைத்துவருகிறார். 5-ரூபாய் சம்பளமுயர்ந்தது. இதையொரு பெருமையாகச் சொல்லிக்கொள்ளவேணுமா வென்றிருந்தேன். அதேயொழிய வேறொன்றுமில்லை."

எச்சம்.—"இனிமேல் உனக்கென்ன, மகராசி, வேணுமென்கிற நகை பூட்டிக்கொள்ளலாம் ; நகையில்லை நகையில்லை யென்று சொல்லிக்கொண்டிருந்தையே ; உன் குறைத் தீர்ந்தது; இனிமேல் உனக்கென்னகுறைச்சல் இராஜாத்தியாட்டமா விருக்கலாம்."

ஒயிலாம்பாள்.—"ஐயோ அம்மா! நீங்களென்ன அப்படி சொல்கிறீர்களே; 5-ரூபாய் சம்பளம் உயர்ந்ததினால் என்னவந்துவிட்டது! நானும் என்னாலான சாமர்த்தியங்களெல்லாம் செய்துபார்த்தேன். 7-வருஷமாச்சு: 500-ரூபாய் நகை யாகவில்லை. அதுவும் ஒடிந்ததும் கழிந்ததும், பழையதும் புதியதுமாக விருக்கிறது. நகையாசைப்பட்டுப் பிரயோசனமில்லையென்று நான் விட்டுவிட்டேன். அரசனை நம்பிப் புருஷனைக் கைவிட்ட கதையாக நகை நகை யென்று நகையாசைப்பட்டால் வயிற்றுப் பிழைப்புக்கும் திண்டாட்டத்தில் வரும்போலிருக்கிறது. போதும் அம்மா நான் நகையாசைப்பட்டது! வாயார வயிறார உண்டுடுத்திச் சௌக்கியமாயிருந்தாற்போதும்."

எச்.—"எதுடீ அதிசயம்: நீ இப்படிப் பேசுகிறது! இப்படி திருப்திப்பட்டிருந்தால் இந்த 500-ரூபாய் நகையென்னமாச் சேர்ந்திருக்கும்! கையில் 500-ரூபாய் நகையாச்சு. சம்பளத்தில் கூட 5-ரூபாயாச்சு; சிறுகச் சிறுகச்சேர்த்தாலும் 500 ரூபாய் நகையை ஆயிரம்-ரூபாய் நகையாக்கப்படாதோ! நன்னா இப்படிச் சொன்னே! உன்னைவிடத் தாழ்ந்த பதவியிலுள்ளவளெல்லாம், புளிச்சக்கண்ணும், சப்பட்டை மூக்கும், தட்டை நெற்றியுமாயிருந்தாலும் என்று நகை பண்ணிப் போட்டுக்கொண்டு குலுக்கிமினுக்கிக்கொண்டு நடக்கிறாளே. தங்கவிக்கிரக மாட்டமா உன்னைப்போல் உருக்கிவார்த்தாப்போலுள்ள பெண்ணுக்கல்லவோ போட்டுப் பார்க்கவேணும்! இந்தக்காலத்திலே புருஷாள் தான் நகைவேண்டாம் நட்டுவேண்டாம் ஆம்படையானை பிரமன் சிருஷ்டித்தபடி பார்த்தாற் போதுமென்று சொல்கிறார்கள். நீயுமோ அப்படி நினைக்கவேண்டும்!"

"நான் என்ன செய்வேன் அம்மா! என்னாலான சமர்த்தெல்லாம் செய்துபார்த்தேன். அவருக்கு ஆபீஸ்வேலை ஒழியவில்லை. வேறு தக்கமனுஷாள் உதவியில்லை. தட்டானுக்கும் கெட்டானுக்குமாகக் கொடுத்துக்கஷ்ட நஷ்டப்படுவதைக்காட்டிலும் இருப்பதைக்கொண்டு திருப்தியடைந்து 'அக்கடா' என்று சும்மாவிருப்பது ரொம்ப உத்தமம் என்று தோன்றுகிறது" என்றாள் ஒயிலாம்பாள்.

"உனக்கு மனுஷாளில்லையென்று நீ குறைப்படவேண்டாம், எத்தனை நகைவேணுமானாலும் நான் வாங்கித்தருகிறேன். பழைய நகையை விற்றுத்தருகிறேன். ஐக்கோர்ட்டு வக்கீல் ஆதிசேஷய்யர் அகமுடையாளுக்கு ஒரு பதக்கம் வாங்கிக்கொடுத்தேன். பழைய தோடா ஒரு ஜோடி விற்றுக்கொடுத்தேன். வடக்குவீதி வீரபத்ராசாரி அகமுடையாள் ஒரு கொலுசு விற்றுக்கொடுக்கச்சொல்லிக் கொடுத்திருக்கிறாள். இன்னம் எத்தனையோ பேர் பெரியமனுஷாள் வீட்டுப் பெண்டுகளுக்கெல்லாம் ஆயிரம், இரண்டாயிரம் வரையில் நகைகள் விற்றும் வாங்கியும் கொடுக்கிறேன். நான் என்னவியாபாரம் செய்தாலும் புருஷாள் காதிலே போடுகிறதில்லை: பெண்டுகளுக்குப் பெண்டுகள் பெண் கை வியாபாரமாகப் போகும். உனக்கென்ன வேணுமானாலும் நான் இருந்து ஒத்தாசை செய்கிறேன்." என்றாள் எச்சம்.

ஒயிலாம்பாள்.—"புருஷாளுக்குத் தெரியாமல் நகைகட்டுகளைக்கொடுத்து வாங்கி வில்லங்கத்தில் வந்து அகப்பட்டுக்கொண்டால், நகைக்கு நகையும் போய், மானத்துக்கு மானமும் கெட்டு, கோர்ட்டு கச்சேரி யென்று அலைந்து திண்டாடவந்தா லென்ன செய்கிறது! அந்த வியாபாரமே எனக்கு வேண்டாமம்மா. வீட்டுக்குள்ளிருந்து புருஷாளோடு ஆயிரம் சண்டைபோடலாம். நாளைக்கு வாசலிலிழுக்கும்படி நேரிட்டால் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகவேண்டும்." என்றாள்.

எச்சம்மா.—"ஐயோ அம்மா! நீ யென்ன அப்படி சொல்கிறையே! உங்களையெல்லாம் போல் நான் வாழக் கொடுத்துவைக்காவிட்டாலும், நான் புடைவைகட்டிய பொம்மனா

ட்டியில்லையா? எனக்கு மானம் வெட்கம் இல்லையா? அப்படி யேதாவது வித்தியாசமாக விருந்தால் இத்தனை பெரியமனுஷாள் வீட்டுப்பெண்களெல்லாம் என்னை நம்பிக் கொடுப்பார்களா? நான் முன்சொன்ன பேர் வழிகளன்றி, ரெங்கராமய்பராம்படையாள் விசாலாக்ஷி 300-ரூபாய் பெறுமான தோடாவும் காப்பும் கொடுத்திருக்கிறுள். நாகநாதய்யரகத்துத் தோலாம்பாள் ஒரு கொடியும் சரடும் கொடுத்தாள். எதிரகத்துப் பங்கஜத்துக்கு ஒரு சரடும் ராக்கிடியும் விற்றுக்கொடுத்தேன். ராஜாம்பாளுக்குத்தோடுவிற்றுக்கொடுத்தேன். மீனுக்ஷிக்கு ஒரு ஓலை விற்றுக்கொடுத்தேன். சீதாலக்ஷ்மிக்கு ஒரு காசிமாலை வாங்கிக் கொடுத்தேன். வராகலக்ஷ்மியம்மாள் நாலு புதுப்புடவை கொடுத்தாள், விற்றுக்கொடுத்தேன். இன்றைத்தேதியில் என்னிடத்தில் 5000-ரூபாய் நகையிருக்கிறது. என்னுடைய நாணயம் இங்கே யெல்லாருக்கும் தெரியும். வேணுமானல் உங்காத்துக்காரரைவிட்டு விசாரிக்கச்சொல்லு. என்னைப்பற்றி கேசவைய்யரைக்கேட்டால் சொல்லுவார்; ராமையருக்குத் தெரியும் என்னை; நடேசையருக்குத் தெரியும், முகுந்தய்யருக்குத் தெரியும், தட்டாரத் தங்காசாரிக்குத்தெரியும், லாகவபத்தருக்குத் தெரியும், கோவிந்தாசாரிக்குத்தெரியும், துணி வியாபாரம் திருமலாசாரிக்குத் தெரியும், ரெங்காசாரியருக்குத் தெரியும், இன்னும் எத்தனை யோபேர் சொல்வேன்—" என்று வார்த்தைகளைச் சரமாரியாகப் பொழிந்து கொட்டினுள்.

இதையெல்லாம் கேட்டிருந்த ஒயிலாம்பாள் மனம் சஞ்சலப்பட்டு ஊஞ்சலாட, சற்றுநேரம் ஒன்றும் சொல்லமாட்டாமல் சும்மாவிருந்தாள். இதைக்கண்ட எச்சம்மாள் நீ நன்ருக யோஜித்துப்பார், உனக்கேதெரியும். பெண்ணுகப் பிறந்து ஒன்றுக்கும் உதவாத கைம்பெண்ணுகி விட்டோமே: பண்ணினபாவம் புருஷனேடு வாழக்கொடுத்துவைக்காமற்போனேம். பெண்ணுப் பிறந்தவர்களுக்காவது ஒத்தாசையாக விருந்து பண்ணினகருமத்தையெண்ணித் தொலைக்கலாமென்று இனிதயெல்லாமெடுத்து மேலேபோட்டுக் கொள்கிறேன். இல்லாவிட்டால் எனக்கென்ன ஒரு வயிறு சோறு! நாலு வீட்டில் போய் முட்டியெடுத்தாலும் ஆச்சு. நாழியாச்சு, நான் போய்வருகிறேன்" என்று எழுந்திருக்கிறபாவனையாக உடம்பை யசைத்தாள்.

அவள் போவதாகச்சொல்லி உடம்பையசைக்கவும், ஒயிலாம்பாள் சிந்தனையிலாழ்ந்திருந்தது நீங்கிப் பேசத்தொடங்கினுள். "இருமே, போகலாம். இன்னம் இரண்டு மணியாகவில்லை. கழுத்தில் போட்டிருக்கும் சரடு அவசரப்பட்டு முதலில்செய்தேன்; இப்பொழுது எல்லாரும் கடிகார அட்டிகை போட்டுக்கொள்கிறுர்களே யன்றி இந்தமாதிரி சரட்டட்டிகை யார் போட்டுக்கொள்கிறுர்கள். நஷ்டமில்லாமல் இதை விற்றுத்தரக்கூடுமானல்,—நேற்றுத்தான் இருபது ரூபாய் கொடுத்தார்; நகைக்கென்று எடுத்துவைத்தேன். அதையும் கூடப் போட்டு நல்லதாகப் புதுமோஸ்தரான கடிகார அட்டிகை யொன்று செய்து போட்டுக்கொள்ளலாம். போனவருஷம்தான் புதிதாகத்தங்கக்காப்பும் கொலுசும் ராகவபத்தரிடம் புது மோஸ்தர்ப்படி செய்து கொடுத்தார். கையில் அதைப்போட்டுக்கொண்டு, கழுத்திலே இதைப்போட்டுக்கொண்டால் ஒன்றுக் கொன்று பொருந்தாமல் விகாரமாகவிருக்கிறது. கழுத்தில் ஒன்று மில்லாவிட்டால் உள்ளங்கழுத்து வெறிச்சாப்போலிருக்கிற தென்று இதைப் போட்டுக்கொண்டு காப்பையும் கொலுசையும் அப்படியே மெருகுகலையாமல் உள்ளேவைத்திருக்கிறேன். இந்தச்சரட்டட்டிகையை விற்றுத்தந்தால் உபகாரமாக விருக்கும்." என்றுள்.

எச்சம்மாள்.—"இவ்வளவுதானே! இப்பொழுதுகொடு இன்னம் மூன்று நாளிலே பணம் தருகிறேன். இடைக்கிடை சவரன் விலை

கொடுத்தால் போதுமேயில்லையோ ?" என்று கேட்டாள்.

ஒயிலாம்பாள்.—"ஐயோ அது வெள்ளைப் பொன்னுகவிருக்கிறதே. சவரன் விலை அதற்கு யார் கொடுப்பார்கள்?"

எச்.—"உனக்கென்ன நானல்லவோ விற்றுத்தருகிறேன். பணத்துக்கு நான் ஜவாபுதாரி, இதோ தட்டானையழைத்து வந்து இடைபோட்டுத் தடை கொடுத்துவிட்டு எடுத்துக் கொண்டு போகிறேன். இன்றைக்கு மூன்ரும் நாள் சவரன்விலை கடையில் விற்கிறபடி பணம் தருகிறேன். இல்லாவிட்டால் இடைகுறையாமல் நகையைத் திருப்பி விடுகிறேன்" என்று சொல்லி, நகையையெடுத்துக்கொண்டு போகப்புறப் பட்டாள்.

நாரதாம்பாள்.—"ஏன், எச்சம்மா, எங்காத்திலே, எங்கம்மாள்கொடுத்த பழைய ராக்கிடியொன்றிருக்கிறது. அதையும் சற்று விற்றுக் கொடுத்து உபகாரம் செய்யக்கூடாதா?"

எச்சம்.—" ஆகா, அதற்கென்ன ! இப்போ கொடுத்தால், இத்தோடு உனக்கும் பணம் கொணர்ந்து தருகிறேன்."

நாரதாம்பாள்.— "எங்காத்துக்காரரைக் கேட்காமல் கொடுக்கக் கூடாது ; என்னை வீட்டைவிட்டுத் துரத்திவிடுவார். இது விற்றுப் பணம் கொண்டுவந்து கொடுக்கவருகிற போது தருகிறேன். அதற்கு முன்னே எங்காத்துக்காரரோடு சொல்லி வாங்கி வைக்கிறேன்." என்ருள்.

இந்த சம்பாஷணை நடந்த மூன்ருநாள் மத்தியானம் 12-மணியடித்தது. எல்லாரும் வழக்கம்போல் நடையிலுட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். இரண்டு மணிக்கெல்லாம் எச்சம்மாள் முகத்தில் புன்சிரிப்புத் தவிழ வியர்வையை விரலால் வழித்துக் கொட்டிக் கொண்டு மடியிலுள்ள முடிப்பொன்றை இடக்கையால் பொத்திக்கொண்டு வந்துட்கார்ந்தாள்.

## BROTHERLY LOVE.

## சகோதர வாஞ்சை, அல்லது, ராஜா உடையரும் அவர் தம்பியும்.

---

இன்றைக்கு ஏறக்குறைய சுமார் முன்னூறு வருடங்களுக்கு முன் மைசூர் ராச்சியத்திற்குப் பிரபுவாயிருந்த ராஜ உடையருக்குச் சாமராஜன் என்ருேர் இளவல் இருந்தான். இவ்விராஜ உடையர் சத்துருக்களை வென்று அவர்களது நாடுகளையெல்லாம் கட்டிக் கொண்டு இவ்வாருகத் தமது இராச்சியத்தை விஸ்தாரப்படுத்திக்கொண்டு வந்தார். அண்ணனுடைய கீர்த்தியையும் முதன்மையையுங் கண்டு சகியாமற் சாமராஜன் ஒரு சிறுசேனையைத் திரட்டிக்கொண்டு அவனுக்கு விரோதமாய் நடக்கலுற்ருன். ஆனுல், பிரபு இவனை ஓர் உபாயத்தினுற் பிடிப்பித்துவிட்டார். தூதர்கள் சாமராஜனைக் கொண்டுவந்து எதிரில் நிறுத்தின வுடனே, பிரபு தமது ஆசனத்தினின்று இழிந்து, இளையோன் இயற்றிய துரோகத்தைக் கருத்தினில் வையாது, இயற்கையான பிரேமையுடனே அவனைக் கட்டித் தழுவப்போயினுர். தன் தமயன் தன்னைக் கொல்லவந்தான் என்னும் மருளினுற் சாமராஜன் அரசனேடு கைப்போர் புரியத் தொடங்கினுன். அதற்குள்ளாக அங்கிருந்தவர்கள் இவனை விடுவித்து விலக்கினர். பிரபு இவனைச் சில நாள்வரையில், அரண்மனைக்கு அப்புறம் அவன் செல்லாவண்ணம், சிறிது நிர்ப்பந்தத்தில் இட்டிருந்தார். இது நிற்க:

அரசவம்சத்தைச் சேர்ந்த இளைஞருள் ஒருவனுகிய நரஸராஜன் என்பவன்,—ராஜ உடையருக்குத் தம்பியின்மீது வெகுதுவேஷமிருக்கின்றது; ஆகையால் இந்தச் சாமராஜனுடைய கண்ணை யான்கிழித்து விட்டாற் பிரபுவுக்கு மிகுந்த சந்தோஷமுண்டாகும்; யான் பிரபுவின் விசுவாசத்திற்கு உரியவனுவேன் என்று துராலோசனைசெய்து, சாமராஜனது கண்

ணைக்கிழிக்கும்பொருட்டுச் சில நீசர்களை நியமித்தான். ஒருநாள் வேற்றரசனது சீமையைச் சயிக்கும் உத்தேசத்துடன் சேனைகள் சூழ்ந்துவர வெளிப்போந்த ராஜ உடையார் இந்தச் சங்கதியைக்கேட்டு, உடனேபின் திரும்பி வந்து, நரஸராஜனையும் அவனுடைய தம்பியையும் வரவழைத்தார். அவர்களிருவரும் தம்முன்வந்து நிற்றலும், அரசன் நரஸராஜனைப் பார்த்து,—அடா! உன் தம்பியின் கண்களை இக்கணமே கிழிக்கக்கடவை எனக் கர்ச்சித்துக் கட்டளையிட்டார். நரஸராஜன் கடகடவென்று நடுங்கிக்கொண்டு,—இத்தகைய சிக்ஷை யடைவதற்கு என் தம்பி என்ன குற்றம் செய்தனன்? என்று கண்ணீர் "உதிர்த்து நின்றான். இதற்கு அரசன்,—அடா, சண்டாளா! நீ எம்தம்பியின் கண்ணைக் கிழிப்பதற்கு அவன் என்னகுற்றம் செய்தான்? இம்மாதிரியான துன்மார்க்கத்தில் நீ நடப்பாயாயின், உன்னைக் கற்செக்கிலிட்டு ஆட்டிக் கசக்குவோம்"—என்றுசொல்லி, இந்தக் கெட்டகாரியஞ்செய்வதற்கு உடன்பட்டிருந்தவர்களையுஞ் சிக்ஷித்து, தம்பியாகிய சாமராஜன் செய்திருந்த அபராதங்களையெல்லாம் மன்னித்து, அவனுக்குவேண்டிய அளவு திரவியத்தையுங் கொடுத்தார். மறுபடியும் இத்தன்மையான அபாயங்கள் எவையும் நேராவண்ணம் அரங்க சமுத்திரமென்னும் ஊரிற் சுகமாய் வசிக்கச் சாமராஜனை விடுத்தனர். இவ்வாறு, உடன்பிறந்தார் எக்குற்றஞ்செய்யினும், அவற்றை நாம் பாராட்டாமல்அவர்மீது அன்புகாட்டிப் பிரேமைவளர்த்துப் புகழுறுவோமாக. பிறக்குங்கால் அண்ணனுந்தம்பியுமாயிருந்து, வளருங்கால் தாயாதிகளெனவேண்டாம். சகோதரர்மீது அன்புவைக்கவேண்டு மென்னும் நீதியைப்புகட்டும் இக்கதையானது மைசூர் சரித்திரத்தினின்று எடுத்து அமைத்துக்கொள்ளப்பட்டது.

## SANITATION COLUMN.

## சுகாதார விஷயம்.

உயிர்களைக் காப்பாற்றும்பொருட்டுச் சுகாதாரமுறைகளை யனுசரித்து அவற்றை யனுஷ்டானத்துக்குக் கொண்டுவருவதிலும் மேலான புண்ணியமாவது, பரோபகாரமாவது இல்லையென்பது பூர்வீகர்களுடைய சித்தாந்தமாக விருந்தது.—டாக்டர் டப்ளியூ. ஜி. கிங்.

### சுகாதாரக் குறிப்புகள்.

குழந்தைகள் வளரவேண்டியகிரமப்படி வளர்ந்தால் 3-அடி உயரத்துக்குமேல் நாலடி உயரம்வரையில் ஒவ்வொரு அங்குல உயரத்துக்கும் 2-பவுண்ட் நிறை கனம் அதிகரிக்கவேண்டும். 4-அடிக்குமேல் 5-அடி உயரம்வரையில் ஒவ்வொரு அங்குல உயரத்திற்கும் 2½-பவுண்ட் நிறையதிகரிக்கவேண்டும். பட்டணவாசங்களில் வளர்கிற குழந்தைகள் நாட்டுப்புற வாசங்களில்வளரும் குழந்தைகளைவிட வளர்ச்சி குன்றியிருப்பது சகஜமாயிருக்கிறது. இதற்குக்காரணம் அவர்கள் வளருவதற்கனுகூலமான நல்ல காற்று, தேகாப்பியாசம் முதலியவற்றிற்கு பட்டணவாசங்களில் அனுகூலமின்மை விசேஷமாகச் சொல்லப்படுகிறது.

* * * *

தேகம் பருக்கிறதும் இளைக்கிறதும் சீதோஷ்ண நிலைமையையும் பூசாரவிசேஷத்தையும் பொறுத்தாகச் சொல்லப்படுகிறது. உலர்ந்த காற்றுள்ள இடத்தில் தேகம் பருக்கிறதென்றும், நீராவி யதிகமாகவுள்ள காற்றில் தேகம் இளைக்கிறதென்றும் தெரிகிறது.

* * * *

அனேகர் ஹிருதயம் பலவீனமாகவிருக்கிறதென்றும், படபடவென்று மார்பு அடித்துக்கொள்ளுகிற தென்றும் முறையிடுகிறார்கள். இதற்குக்காரணம் பெரும்பாலும் ஹிருதயத்தில் ஒரு குற்றமுமிருக்கிற தில்லையென்றும், அஜீர்ணம், பட்டணவாசம், தேகாப்பியாசமின்மை இக்காரணங்களால் பலவீனப்பட்டி

ருக்கிறவர்களுக்கு அந்தச் சின்னம் தோன்றுவ துண்டென்றும், இவர்களுக்கு அஜீரணம் சொஸ்தமானுல் அந்தச்சின்னம் மாறிப்போமென்றும் ஒரு வைத்தியர் சொல்லுகிருர். இடுப்பை மிக வொடுக்கிக் கட்டிக்கொள்வதாலும் அந்த சின்னம் நேரிடக்கூடும். ஒட்டிபாணம் அல்லது கச்சையைத்தளர விட்டால் அது நிவாரணமாகும். ஸர் ராபர்ட் க்ரிஸ்டிஸன் என்னும் ஒரு வைத்திய நிபுணர் நன்ருகவும் விரைவாகவும் நடக்கிற அப்பியாசத்தினுல் பலவீன ஹிருதயம் பலமடைகிறது என்று சொல்லியிருக்கிருர். இதனுல் ஹிருதயத்தைப்பற்றிய நோய் இருப்பதாகநினைக்கும் அனேகரில் பெரும்பாலாருக்கும் உண்மையில் அந்நோய் இருக்கிறதில்லை யென்பதும், வேறு இதர காரணங்களால் தோன்றும் சின்னங்களை பலவீன ஹிருதயத்தின் சின்னமாக நினைத்து வீணுக மயங்குகிருர்களென்பதும் அவருடைய துணிபு. பட்டணவாசிகள் தேகாப்பியாசத்துக் கிடமின்றி கெட்ட காற்றைச் சுவாசம்செய்துகொண்டு ஜனநெருக்கமான இடங்களில்வசித்துவருவது எவ்வளவோ சுகவீனத்துக்குக் காரணமாகவிருக்கிறதென்று அவர் சொல்லுகிருர்.

* * * *

தேகசக்தி மனுேசக்திபென்னு மிரண்டில் தேகசக்தி மனதைப் பாதிப்பதைப்போல் மனுேசக்தி தேகத்தைப் பாதிக்கிறதென்பது பிரத்தியக்ஷானுபவமாகக் கண்டறிந்தவிஷயமாக விருக்கிறது. டாக்டர் டியூராண்ட் என்னும் ஒரு வைத்தியர் மனுேபாவனையினுல் தேகசுகம் எவ்வளவு பாதிக்கப்படுகிறதென்பதை யறியும்பொருட்டு அவரிடம் வைத்தியத்திற்கு வந்தவர்களில் 100-பேர்களுக்கு தண்ணீரைத் தித்திக்கச் செய்துகொடுத்தார். கொடுத்த 15-நிமிஷங்கள் கழித்து தான் ஏதோ தப்புசெய்துவிட்டவர்போல் பாவனை செய்துகொண்டுவந்து அவர்களுக்கெல்லாம் பலமான வாந்திமருந்து ஒன்று தவறிப்போய்க்கொடுத்துவிட்டதாகச் சொல்லி அதற்காக வேண்டிய ஏற்பாடு செய்யவேண்டு மென்று தெரிவித்தார். 100-ல் 80-பேர்கள் உடனே நோவுகண்டுவாந்திமருந்துகொடுத்தால் என்ன பாடுபடுவார்களோ அந்த சின்னங்களெல்லாம் காட்டினுர்கள். இதனுல் மனுேபாவனையினுல் தேகசுகம் விசேஷமாகப் பாதிக்கப்படுகிறதென்பது ஏற்படுகிறது.

* * * *

இதற்கு இன்னெரு உதாரணமாகசமீபத்தில் வெளியான சென்னை கவர்ன்மெண்டு ரசாயன பரிசோதகர் ரிபோர்ட்டில் குறித்துள்ள சம்பவத்தைக் கூறலாம். ஒரு ஊரில் ஏதோ சொத்துத் திருட்டுப்போயிற்றென்று மந்திரவாதியைக் கூப்பிட்டு களவைக் கண்டுபிடிக்க யத்தனம்செய்தார்கள். மந்திரவாதி இல்லாத ஆடம்பரங்களெல்லாம் செய்து மாவிளக்குப் போட்டு, அந்த மாவை கூடியிருந்தவர்களுக்குக்கொடுத்து, திருடினவர்கள் அதைச்சாப்பிட்டால் மயக்கம்வந்து விழுந்துவிடுவார்களென்று சொன்னுன். அதைச்சாப்பிட்ட ஒரு பையன் அப்படியே மயக்கம்வந்து பிரக்ஞையற்று விழுந்துவிட்டான். மந்திரவாதியேதோ விஷம்கலந்து கொடுத்துவிட்டானென்று சந்தேகப்பட்டு அந்த மாவை கவர்ன்மெண்ட் ரசாயன பரிசோதகருக்கு அனுப்பினுர்கள், அவர் அதைப் பரிசோதித்துப்பார்த்ததில் அதில் குற்றமொன்றுமில்லாததுகண்டு, அந்தப் பையன் குற்றமுள்ள நெஞ்சுள்ளவனுய் பயந்து மூர்ச்சித்துப் போயிருக்கவேண்டுமென்று தெரிவித்தார். மனதுக்கு தேகத்தின் மேலுள்ள சக்தியை நன்ருக அறிந்துகொண்டே இவர்கள் இப்படி ஜனங்களை மயக்குகிருர்கள். மந்திரத்தினுல் வியாதிசொஸ்தம் செய்வதாகச் சொல்வதும் இந்த ரகசியத்தைக்கொண்டே.

* * * *

வட ஆற்காடு ஜில்லா வாலாஜாவில் ஒரு பிராமணன் அவன் வீட்டினுள்ளிருந்த கிணற்றைத் தூர்வாரி ஆழமாகப் பறிப்பதற்காகச் சில ஒட்டர்களைக்கொண்டு வேலைநடத்தினன். அந்த ஒட்டர்களில் ஒருவன் பாதிக்கிணறு இறங்கியதும் மயக்கம்வந்து சுழன்று கிணற்றில்விழுந்து இறந்து விட்டான். அவனையெடுப்பதற்காக ஒருவர்பின்னொருவராக நாலுபேர் கிணற்றில் இறங்கினர்கள்: இவர்கள் நால்வரும் அப்படியே திக்குமுக்காடிக் கிணற்றில்விழுந்து மாண்டுபோனர்கள். பிறகு போலீசார்வந்து கிணற்றைப் பரிசோதிக்க ஒரு பன்றியைக் காலைக்கட்டிக் கிணற்றில் விட்டார்கள். பாதி தூரம்போனபின் அதுவும் திக்குமுக்காடி இறந்தது. பிறகு ஒரு கோழியைவிட்டுப் பரீக்ஷித்தார்கள்: அதுவும் அப்படியேயிறந்தது. ஞானமற்ற மூடஜனங்கள் இந்தக்கிணற்றில் பேயிருந்தது பிசாசிருந்தது என்றுசொல்லி நடுங்குவார்கள். இதேமாதிரி இன்னொரிடத்தில் ஒரு கிணற்றைத் தூர் எடுக்கும்வேலையை சட்டைக்காரன் ஒருவன் ஒப்புக்கொண்டான். அவன் அந்தக்கிணற்றில் எடுத்ததும் தானிறங்காமல் ஒரு மெழுகுவற்றியைக் கொளுத்திக் கிணற்றினுள் விட்டான். பாதிக் கிணறு போனதும் ஒளி மங்கி அணைந்து போய்விட்டது. அதைக்கண்ட அவன் புருவத்தைத் தூக்கித் தலையையாட்டிக்கொண்டு 'அப்பா!' என்று சொல்லிக்கொண்டு ஒரு துணிக்குடை கொண்டுவரச் சொன்னன். அக்குடையை விரித்து ஒரு கயிற்றில் கட்டி ஜலத்தில் நனையாதபடி அதைக்கிணற்றுள் விட்டுவிட்டு மேலேயிழுத்து தண்ணீரிறைக்கிறபாவனையாக அந்தக்குடையைத் தரைமேல் கவிழ்த்து வந்தான். அந்தக் குடையில் தண்ணீர் ஒன்றும் வராமையால் கிட்டவிருந்தவர்கள் அவனைப் பைத்தியக்காரனைப்போல் பாவித்துப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். இப்படிப்பலதரம் குடையைக் கிணற்றில்விட்டு மேலேயிழுத்துக் கொட்டினபின் அவன் மறுபடியும் கொளுத்தின விளக்கைக் கிணற்றில் விட்டுப்பார்த்தான்: தண்ணீர் மட்டம்வரையில்விட்டும் அது அங்கே நன்ருக எரிந்துகொண்டிருக்கக் கண்டான். இதைப்பார்த்திருந்தவர்கள் இப்பொழுது இளிச்சவாய்த்தனம் போனவர்கள் தாங்களேயென்றுணர்ந்து அவன் செய்தசெய்கையின் நோக்கமென்னென்று அவனை வினயமாய்க் கேட்கவும், அவன் முதலில் விளக்கணைந்தபொழுது கிணற்றில் 'கார்பானிக் ஆஸிட்' என்னும் கரிவாய்வு அதிகமாக விருந்ததால் விளக்கு அணைந்துபோயிற்றென்றும் அக்காற்று சாதாரணக் காற்றைவிட கனமானதால் குடையைவிரித்து கிணற்றில் தாழ்த்தி மேலே யிழுத்தால் அது குடையில் தங்கி மேலே வந்துவிடு மென்றும், அதை அப்படி கொண்டுமொண்டு கொட்டினதினல் அக்காற்று முழுவதும் வெளியேவந்துவிட இரண்டாந்தரம் கிணற்றில் தாழ்த்தப்பட்ட விளக்கு முன்போல்மங்கி அணைந்துபோகாமல் பிரகாசமாக எரிந்ததென்றும்சொல்லி அவர்களுக்கு விஷயத்தை விளங்கவைத்தான். அறியாமையினல் ஓரிடத்தில் 5-பேர்கள் புத்திகெட்டு கிணற்றில் விழுந்து மாண்டார்கள். அறிவின் பயனுயுண்டானபுத்தி சூக்ஷமத்தால் அதேசந்தர்ப்பத்தில் மற்றொருவன் தன்னுயிரைக் காப்பாற்றிக்கொண்டதுமட்டுமன்றி தானேப்புக்கொண்ட வேலையையும் தனக்கு ஹானிவராமல் சுலபமாகச்செய்துமுடித்து தனக்குள்ள கூலியை வாங்கிச்சென்றுன். இதனல் புத்தி விவேகத்தின் பெருமை வெளியாயிற்று.

"அறிவுடையார் எல்லா முடையார் அறிவிலார்
என்னுடைய ரேனுமிலர்"

என்று திருவள்ளுவநாயனரும் கூறியுள்ளாரல்லவா.